Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS(C)P.P. 5(

**நல்லுறவு**

உறவென்றிருந்தால், அது இலாப நோக்கமற்றிருக்கிறதா?- அதுதான் உறவு-நல்லுறவு

-பேறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**சிறந்தது**

உள்ளதைப் பங்கிட்டுண்பது, உழைப்பையும் பங்கிட்டு மேற்கொள்வது என்ற நிலையே சிறந்தது.

-தந்தை பெரியார்

மலர்: 8 சென்னை 27-2-1984 திங்கள் வெளியீடு: 28-2-1984 செவ்வாய் இதழ்: 132

அமெரிக்க கிறிஸ்தவ மதத்தலைவர் பாராட்டு

## தமிழக சத்துணவுத் திட்டம்: கற்பனையில் கூட நினைத்துப் பார்க்க முடியாத பிரம்மாண்ட திட்டம்

அமெரிக்காவைச் சேர்ந்த கிறிஸ்துவ மதத்தலைவர் பில் தாமஸ் சத்துணவு மையத்திற்கு சென்று பார்வையிட்டார்.

அமெரிக்காவைச் சேர்ந்த கருப்பர் இனத் தலைவரான கிறிஸ்தவ மதப் பெரியார் டாக்டர் பில்தாமஸ், மதுரை மாநகராட்சி அலுவலகத்தில் மேயர் பட்டுராசனை சந்தித்தார். தான் ஏற்கனவே கேள்விப்பட்டிருந்த முதலமைச்சர் அவர்களின் சத்துணவுத் திட்டத்தைப் பற்றி ஆவலுடன் விசாரித்தார். மதுரை மாநகராட்சியால் நடத்தப் பெறும் சத்துணவுக் கூடம் ஒன்றைப் பார்வையிடவும், தன்னுடைய விருப்பத்தைத் தெரிவித்தார்.

மேயர் பட்டுராசன் டாக்டர் பில்தாமஸ் அவர்களை மாநகராட்சியினால் நடத்தப்பெறும் தல்லாகுளம் நடுநிலைப்பள்ளி சத்துணவு மையத்திற்கு அழைத்துச் சென்று, 590 சிறுவர்கள் சத்துணவு சாப்பிடுவதைக் காண்பித்தார். அந்தப் பிள்ளைகளிடம் சத்துணவு பற்றி ஆர்வத்தோடு டாக்டர் பில்தாமஸ் கேள்விகள் கேட்டார். மேலும் அவர் இந்த சத்துணவுத் திட்டமானது கற்பனையில் கூட நினைத்துப் பார்க்க முடியாத பிரம்மாண்டமான திட்டம் என்றும், உலகில் எங்குமே இது மாதிரியான திட்டம், அதுவும் 70 இலட்சம் குழந்தைகளுக்குப் பயன்படும்படியாக நடத்தப்படுவதில்லை என்றும் கூறினார்.

தான் இதுவரை 35 நாடுகளுக்குச் சென்றிருப்பதாகவும் அங்கெல்லாம் இல்லாத வகையில் குழந்தைகள் நலன் கருதி தமிழகத்தில் சிறப்பாக இத்திட்டம் நிறைவேற்றப்படுவது குறித்த ஆச்சரியத்தையும், மகிழ்ச்சியையும் அளிப்பதாக தெரிவித்தார்.

பள்ளியினுடைய பார்வையாளர் புத்தகத்தில் இந்த சத்துணவு தயாரிக்கப்படும் முறை பற்றிப் பாராட்டியும், இந்தத் திட்டத்தை இந்தியாவில் உள்ள எல்லா மாநிலங்களுமே பின்பற்றினால் மிக நன்றாக இருக்குமென்றும் குறிப்பிட்டு டாக்டர் பில்தாமஸ் எழுதியுள்ளார்.

சென்னையில்

## வழிப்பறி: 12 மணி நேரத்தில் ஆசாமிகள் கைது

சென்னை, பிப். 27- டாக்சியில் வந்து ஆட்டோவை மடக்கி ரூ 25 ஆயிரம் கொள்ளையடித்த ஆசாமிகளை சென்னை போலீசார் 12மணி நேரத்தில் பிடித்து கைது செய்தனர். பொருள்களும் மீட்கப்பட்டன.

சிங்கப்பூரில் இருந்து விமானம்மூலம் சென்னை வந்த ராமராஜ் (வயது 38) என்பவர் டாக்சியில் வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்த போது இந்தக் கொள்ளை நடந்தது.

ஆட்டோவில் வந்த 3 பேர் டாக்சியை மடக்கி கொள்ளை அடித்தனர். இது பற்றிய புகாரை தொடர்ந்து சைதாப்பேட்டை போலீசார் 12 மணிநேரத்துக்குள் ஆசாமிகளை வலை வீசி பிடித்து கைது செய்தனர்.

## அரசியல் சட்டத்தை கிழித்து சீக்கியர் கட்சியினர் அமளி

### சட்ட எரிப்புக்கு லாரியில் மறைந்து வந்தார் முன்னாள் முதல்வர்

புதுடெல்லி, பிப். 27- சண்டிகாரில் சீக்கியர் கட்சியினர் அரசியல் சட்டத்தை கிழித்தனர் டெல்லியில அரசியல் சட்டத்தை எரிக்க, முன்னாள் முதல்வா பாதல் லாரியில் ஒளிந்து கொண்டு வந்தார்.

அகாலிதளக்கட்சியினர் ஏற்கெனவே அறிவித்தபடி, அந்த கட்சியின் 4 தலைவர்கள் சண்டிகாரில் அரசு அலுவலகம் முன் அரசியல் சட்டத்தின் 25 வது பிரிவை கிழிததனர்.

அரசியல் சாசன சட்டத்தின் 25வது பிரிவு ''இந்துக்கள் என்றசொல் சீக்கியர்கள், ஜைனர்கள் மற்றும் புத்தமதத்தினரையும் குறிப்பிடுவதாகும். இந்து மதம் என்பது சீக்கிய, ஜைன, புத்த மதங்களை உள்ளடக்கியதாகும்'' என்றுகூறுகிறது.

இந்தசட்டத்தை அகாலிகள் எதிர்க்கிறார்கள். சீக்கியர்கள் இந்துக்கள் அல்ல சீக்கிய மதம் இந்து மதத்திலிருந்து வேறுபட்டது என்று அகாலிகள்கூறுகிறார்கள்.

சட்டத்தின் இந்த பிரிவை கிழித்த அகாலி தலைவர்கள டோக்ரா, சுர்ஜித்சிங்பர்னாலா, சீமா பல்வந்த்சிங் ஆகிய நால்வரும் கைது செய்யப்பட்டனர்.

இந்த 4 பேரும் டெல்லியில் அரசியல் சட்டத்தை எரிக்க இருந்தவர்கள். இந்த அணியில் முன்னாள் முதல்வர் பிரகாஷ்சிங்பாதலும் இருந்தார்.

பாதல்மட்டும் ஒரு லாரியில் ஏறிஒளிந்து கொண்டு டெல்லி போய் சேர்ந்தார்

பஞ்சாப் பகுதியிலிருந்து டெல்லிக்கு செல்லும் வழிகளைபோலீசார்சோதனையிட்டு அகாலிதளத்தினரை கைது செய்து வருகிறார்கள்.

டெல்லிக்கு போய்ச் சட்ட எரிப்பில் கலந்து

(4ம் பத்தி பார்க்க)

மாநிலங்களவையில் தகவல்

## குறைந்தபட்ச ஊதியசட்ட திருத்தம் விரைவில் வருகிறது

புதுடெல்லி, பிப். 27 குறைந்தபட்ச ஊதிய சட்டத்திற்கு ஒரு திருத்த மசோதா கொண்டு வருவது பற்றி அரசு பரிசிலித்து வருகிறது. திருத்தமசோதா விரைவில் கொண்டு வரப்படுமென்று மாநிலங்களவையில் மத்திய தொழிலாளர் நல அமைச்சர் வீரேந்திர பாட்டில் தெரிவித்தார்.

கேள்வி ஒன்றுக்கு பதிலளித்த அமைச்சர்திருத்தம கொண்டுவருவதற்கு முன் பல நடைமுறைகள் பற்றி அரசு பரிசீலிக்க வேண்டியுள்ளது. அவைகளெல்லாம் முடிந்து விட்டன. சட்ட திருத்தம் குறித்த பரிசிலனை முன்னேறிய நிலையில் உள்ளது. அவை முன் விரைவில்சமர்ப்பிக்கப்படும் என்றும் தெரிவித்தார்.

தொழிற் பயிற்சியோடு இணைந்த

## புதிய கல்வித் திட்டம்: படிப்படியாக செயல்படுத்தப்படும்

### அமைச்சர் அரங்கநாயகம் பேட்டி

திருச்சி பிப் 27- தொழிற் பயிற்சியோடு இணைந்த புதிய கல்வித் திட்டம் அடுத்து வரும் கல்வியாண்டில் அறிமுகப் படுத்தப்படும் அது படிப்படியாக செயல்படுத்தப்படும் என்று அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

அமைச்சர் அரங்கநாயகம் நிருபர்களிடம் கூறியதாவது:-

வேலை வாய்ப்புக்கு உதவும்வகையில் தொழிற் பயிற்சி இணைந்த கல்வித் திட்டம் கொண்டு வரப்படும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்து இருக்கிறார்.

இந்தப் புதிய திட்டம் அடுத்த கல்வியாண்டு முதல் அறிமுகப்படுத்தப்படும். படிப்படியாக இத் திட்டம் அமலாக்கப்படும்.

மேல் நிலைப்பள்ளிகளில் பாடச்சுமையைக் குறைப்பது பற்றி அரசு பரிசீலித்து வருகிறது.

அண்ணாத் தொழில் நுட்பப் பல்கலைக்கழக துணை வேந்தர் டாக்டர் குழந்தை சாமி கமிட்டி பரிந்துரைகளின் படி மேல்நிலைப் பள்ளிகளில் தொழில் முறைக் கல்வித் திட்டத்தை மாற்றி அமைக்க இருக்கிறோம்.

தமிழகத்தில் அடுத்த பல்கலைக்கழகம் காரைக்குடியில் துவங்கும்.

தமிழ்நாட்டில் பொறியியல் கல்லூரிகளில் மாணவர் அனுமதிமுறையை மேலும் சீரமைப்பது பற்றியும் அரசு ஆலோசித்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.



அன்னை

## தெரசாவிடம் ரூ 1.5 லட்சம் மதிப்புள்ளவீடு தரப்படுகிறது

சென்னை, பிப். 27- சமூக சேவைக்காக ரூ 1.5 லட்சம் மதிப்புள்ள ஒரு வீடு அன்னை தெரசாவிடம் வழங்கப்படுகிறது.

ஏற்காடுதேயிலை ஏற்றுமதியாளரும், தொழிலதிபரும் சமூக தொண்டு புரிபவருமான எம். எஸ். டி. ராஜேஷ் ஏற்காட்டில் இருக்கும் ரூ 1.5 லட்சம் மதிப்புள்ள வீட்டை வழங்குகிறார்.

இந்த வீட்டை அவர் முதல்வர் புரட்சிதலைவரிடம்வழங்குவார். முதல்வர் புரட்சித் தலைவர் அந்த வீட்டை அன்னை தெரசாவிடம் வழங்குவார்என்று ஜெகத்ரட்சகன் எம். எல். ஏ, கூறினார்.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

கொள்ள முடியாது என்பதால் 4பேரும் சண்டிகாரில் சட்ட கிழிப்புப்போர் நடத்தனர்.

டெல்லிக்கு தப்பிவந்த பாதல் புதிதாக வேறு 4 அகாலி தளக்கட்சியினரை சேர்த்து கொண்டு இன்று பிற்பகல் நாடாளுமன்றம் முன்பு சட்டத்தை எரிக்கிறார்.

டெல்லியில் பாதல் நிருபர்களிடம் கூறுகையில் நாடாளு மன்றக்கூட்டம் முடிவடையும் வரை சட்ட எரிப்பு போராட்டத்தை தனது கட்சி வாரம் ஒரு முறை தொடர்ந்து நடத்தும் என்றார்.

பாரதீய ஜனதாகட்சி இன்று டெல்லியில் 'பந்த்' நடத்துகிறது.

பஞ்சாப், அரியானாவில் நடைபெறும் படுகொலைகளைக் கண்டித்து இந்த 'பந்த்' நடக்கிறது. இதனால் டெல்லியில் சகஜ வாழ்க்கையில் பாதிப்பு ஏதும் ஏற்படவில்லை.

## வீடுகட்ட கடன் வசதி தாராளமாக கிடைக்க புதியதிட்டம்

சென்னை, பிப். 27- அரசு ஊழியர்களுக்கு வீடு கட்ட தாராள கடனுதவி வழங்க அரசு புதுதிட்டத்தை அறிவித்துள்ளது. அரசு நிறுவனங்கள், கார்ப்பரேசன்கள் தங்கள் உபரி நிதியை வீட்டு வசதி நிதிக்கழகத்தில் முதலீடு செய்ய அரசு உத்தரவிட்டுள்ளது.

தமிழக அரசின் பொது நிறுவனங்களும், கார்ப்பரேஷன்களும் தங்களிடமுள்ள உபரி நிதியை வீட்டுவசதி வளர்ச்சிக் கழகத்திடம் முதலீடு செய்யவேண்டுமென அரசு உத்தரவிட்டுள்ளது.

வீட்டு வசதி வளர்ச்சி நிதிக்கழகம் அரசுஊழியர்களுக்கும், பொதுத்துறை, கார்ப்பரேஷன் ஆகியவற்றில் பணியாற்றும் ஊழிய [illegible] வீடு கட்டுவதற்காக கடனுதவி செய்து வருகிறது. ஏராளமானோர் வீடு கட்டுவதற்கு கடனுதவி கேட்டு மனுசெய்திருக்கிறார்கள். ஏற்கெனவே 25 கோடி ரூபாய் வரை வீட்டு வசதி வளர்ச்சி நிதிக்கழகம் அரசு ஊழியர்கள் வீடு கட்டுவதற்காக கடனுதவி செய்து வருகிறது.

இக்கழகத்திற்கு டிட்கோ, சிட்கோ நிறுவனங்கள் தங்களுடைய உபரி நிதியை முதலீடு செய்திருக்கின்றன. இதனால் ஒசூர், அரக்கோணம் ஆகிய ஊர்களில் ஊழியர்கள் வீடுகட்டுவதற்காக கடனுதவி வழங்கப்படுகிறது. அதே போன்று அரசின் மற்ற பொது நிறுவனங்களும், கார்ப்பரேஷன்களும் தாங்கள் கணக்கு வைத்திருக்கும் 5 வங்கிகள் தவிர மேலும்தங்களிடம் உள்ள உபரிநிதியை வீட்டுவசதி வளர்ச்சிநிதிக் கழகத்திடம் முதலீடு செய்ய வேண்டுமென்று அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது.

ஆந்திரம், மராட்டியம் மேற்கு வங்கத்திலும் இது போன்ற நிறுவனங்கள் தங்களிடம் உள்ள உபரி நிதிகளை வீட்டு வசதி வளர்ச்சி நிதிக்கழகத்திடம் முதலீடு செய்கின்றன தமிழக அரசின் நிறுவனங்களும் இவ்வாறு முதலீடு செய்வதால் மேலும் பல்லாயிரக்கணக்கான ஊழியர்கள் கடன்கேட்டு மனு செய்வதால் அவர்களுக்கு கடனுதவி அளிக்க முடியும்.

சென்னை விருகம்பாக்கத்தில்

## வீட்டுக்குள் 9 பிணங்கள்

சென்னை, பிப். 27— சென்னையில் பூட்டிய வீட்டுக்குள் இருந்து ரத்தம் வெளியே வழிந்து கொண்டு இருந்தது. உள்ளே 9 பிணங்கள் இருந்தன.

விருகம்பாக்கத்தில் பூட்டப்பட்டிருந்தவீட்டுக்குள் இருந்து ரத்தம் பெருக்கெடுத்து வெளியே வழிந்திருந்தது. அந்த பகுதியில் ஒரே பிணநாற்றமாகவும் இருந்தது.

அக்கம் பக்கம் உள்ளவர்கள் இது குறித்து போலீசில் புகார் செய்தனர், போலீசார் வந்து கதவை உடைத்து உள்ளே சென்றனர்.

மரப் பெட்டிக்குள் இருந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது அந்த பெட்டிக்குள் அழுகிய நிலையில் பிணங்கள இருந்தன. 9 பிணங்கள் அங்கே கிடந்தன. அவை அடையாளம் கண்டுபிடிக்க முடியாத அளவுக்கு அழுகி சிதைந்துப் போயிருந்தன

தகவல் கிடைத்ததும் உயர் போலீஸ் அதிகாரிகள் அங்கு சென்று பிரேத விசாரணை நடத்தினார்கள்.

தொடர்ந்து புலன் விசாரணை நடந்து வருகிறது.

எக்ஸ்ரே பிலிம்களை

## கடத்த முயன்ற ஆசாமி கைது

சென்னை, பிப். 27— லூகாஸ் வயது 45 இவர் பொதுமருத்துவமனையில் துப்புரவு தொழிலாளி. பயன்படுத்தப்பட்ட 200 எக்ஸ்ரே பிலிம்களை ஒரு பையில் போட்டு எடுத்து வந்தபோது பிடிபட்டார்.

இவர் 2-வது மெட்ரோபாலிடன் மாஜிஸ்திரேட்டுடன் ஆஜர்படுத்தப்பட்டார். 15 நாள் காவலில் வைக்க மாஜிஸ்திரேட் உத்தரவிட்டார்.

# முதல்வர் நடத்தி வைத்த உக்கம்சந்த் தம்பி திருமணம்

**சென்னை, பிப். 27— கழக சட்டமன்ற உறுப்பினர் உக்கம்சந்தின் தம்பி சுசில்குமார் திருமணம் சென்னையில் முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் நடைபெற்றது.**

மதுராந்தகம் தொகுதி கழக சட்ட மன்ற உறுப்பினர் உக்கம்சந்த்தின் தம்பி சுசில் குமாருக்கும் சென்னை ஏழு கிணறு பாஸ்மல் சவுக்கார் மகள் காந்தா குமாரிக்கும் சென்னையில் திருமணம் நடைபெற்றது.

முதல்வர் புரட்சித் தலைவர் மண விழாவுக்கு தலைமை வகித்து திருமணத்தை நடத்தி வைத்தார்.

புரட்சித்தலைவர் மண மக்களிடம் மாலையை எடுத்துக் கொடுக்க மண மக்கள் மாலை மாற்றிக் கொண்டனர்.

பின்னர் புரட்சித் தலைவர் மணமக்களை வாழ்த்திப் பேசுகையில் கூறியதாவது:-

நீங்கள் பின்பற்றும் ஜைன மதத்தில் பொய் சொல்லக்கூடாது. பிறர் சொத்துக்கு ஆசைப்படக் கூடாது, மற்றவர்களுக்காக உழைக்க வேண்டும் துன்பம் கொடுக்க கூடாது சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகள் கூடாது என்ற கோட்பாடுகள் உள்ளன. இத்தனை கோட்பாடுகளையும் நிறைவேற்றுவதில் உக்கம்சந்த் முன்னோடியாக இருக்கிறார்.

இந்தப் பண்புகளை அவரது அருகில் இருந்து தெரிந்து கொண்டேன். ஆடம்பரமாக செலவு செய்யாதீர்கள்; எளிமை, அன்பு, அறத்தை உங்களின் உடல் கவசமாக அணிந்து கொள்ளுங்கள். அதற்கு எடுத்துக்காட்டாக விளங்குங்கள்.

உங்கள் வாய்ப்பு வசதிகளை நல்ல செயலுக்கும் மக்கள் நல்வாழ்வுக்கும் பயன்படுத்துங்கள். ஏழ்மையை விரட்டுங்கள்.

தங்கள் தந்தை, தாய். அண்ணன் ஆகியோரை மணமக்கள் பின்பற்ற வேண்டும். என்றுகேட்டுக் கொள்ளுகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

சட்டசபை சபாநாயகர் ராசாராம், அமைச்சர்கள் எஸ். டி. எஸ்., கலைமணி, கழக கொள்கை பரப்புச் செயலாளர், செல்வி ஜெயலலிதா விமல்சந்த் ஆகியோர்களும் மணமக்களை வாழ்த்திப் பேசினார்கள்.

சட்டமன்ற உறுப்பினர்கள் ராமலிங்கம், கண்ணன். கணேசன் மற்றும் காஞ்சி பன்னீர்செல்வம் ஆகியோர்களும் திருமண விழாவில் கலந்து கொண்டனர்.

திருமணத்துக்கு வந்திருந்தவர்களை உக்கம் சந்த், மோகனரங்கம் எம்.பி. ஆகியோர் வரவேற்றனர். உக்கம்சந்த் நன்றி கூறினார்.

# ஈரான்-ஈராக் போர்: இதுவரை 14,500 பேர் மரணம்

பாக்தாத், பிப். 27 ஈரானுக்கும் ஈராக்குக்கும் யுத்தம் நடந்து வருகிறது. ஈரான் ராணுவ வீரர்கள் 14,500 பேர் இதுவரை கொல்லப் பட்டதாக ஈராக் அறிவித்துள்ளது.

# அமைச்சர் கே. ஏ. கே. நிகழ்ச்சிகள்

சென்னை, பிப் 27— தமிழக பால்வளத்துறை அமைச்சர் கே. ஏ. கே. வரும் 29ம் தேதி கோவில் பட்டி அருகே சங்கரன் கோவிலில் கூட்டுறவுசங்க புதிய கட்டிடத்தை திறந்து வைக்கிறார். மற்றும் விக்கிரம சிங்கபுரம் சுப்பையா இல்ல நிகழ்ச்சி.

மாலை 7மணி- சங்கரன் கோயில் பொது மக்கள் வரவேற்பு. 1-3 84 அன்று மதுரை நிகழ்ச்சிகள்.

# மாணவர் அமைப்பு செயல்வீரர் கூட்டத்தில் லியாகத் அலிகான்

சென்னை, பிப். 27- கோயம்புத்தூர், பெரியார், நீலகிரி ஆகிய மாவட்ட அனைத்துக் கல்லூரி மாணவ செயல்வீரர் கூட்டம் வேளாண்மை பல்கலைக் கழக விருந்தினர் விடுதியில் நடைபெற்றது.

கழக மாணவர் அணி துணைச்செயலாளர் கா. லியாகத் அலிகான் தலைமை வகித்தார்.

மாவட்ட மாணவர் அமைப்பைச் சேர்ந்த தொகுதி நகர மாணவர் அமைப்பாளர்களும் கலந்து கொண்டனர்.

கூட்ட இறுதியில் பல்வேறு தீர்மானங்கள்நிறைவேற்றப்பட்டன.

# தமிழ்நாடு பின்தங்கிய பகுதிகளில் புதிய நூற்பாலைகள்

## மத்திய அரசு அனுமதி வழங்க அமைச்சர் திருநாவுக்கரசு வேண்டுகோள்

**சென்னை, பிப். 27- நிபந்தனைகள் தளர்த்தப்பட்டு தமிழகத்தில் தொழிலில் பின் தங்கிய மாவட்டங்களில் . நூற்பாலைகள் தொடங்க மத்திய அரசு அனுமதி அளிக்க வேண்டும் என்று கைத்தறித் துறை அமைச்சர் திருநாவுக்கரசு கேட்டுக் கொண்டார்.**

சென்னையில் "கைத்தறி எக்ஸ்போ 84" கண்காட்சியை தமிழககைத் தறி துறை அமைச்சர் திருநாவுக்கரசு துவக்கி வைத்தார்.

இந்தவிழாவுக்கு மத்திய வர்த்தகத்துறை துணை அமைச்சர் பி. ஏ. சங்மா தலைமை வகித்தார்.

அமைச்சர் திருநாவுக்கரசு பேசுகையில் கூறியதாவது:

எந்தவிதமான தொழிற்சாலையும் இல்லாத மாவட்டங்களில் தான் நூற்பாலைகள் தொடங்கப்படவேண்டும் என்ற மத்தியஅரசின் கொள்கை தளர்த்தப்படவேண்டும்

தொழில் துறையில் எந்தமாவட்டம் பின் தங்கியிருக்கிறதோ- எந்தப்பகுதியில் தொழில்கள் முன்னேறாமல் இருக்கிறதோ அந்த மாவட்டங்களில் நூற்பாலைகளை துவக்க மத்திய அரசு அனுமதிவழங்கவேண்டும்.

### நிபந்தனை

மத்திய அரசின் நிபந்தனைகாரணமாக எட்டயபுரம், கமுதி ஆகிய இடங்களில் கூட்டுறவு நூற்பாலைகள் அமைக்கப்படுவது பாதியிலேயே நின்று கொண்டிருக்கிறது.

பஞ்சு அதிகம் கிடைக்கும் இடங்கள், நெசவாளர்கள் அதிக அளவில் வசிக்கும் இடங்களில் நூற்பாலைகள் அமைக்கப் பட்டால் தான் மக்களுக்கு தகுந்த பயன் அளிக்கும், நெசவுத் தொழில் கூடங்கள் அடங்கிய விடுகள் கட்டித்தருவதற்கும் தமிழக அரசு அமுல்படுத்தி வரும் நெசவாளர்களுக்கான இன்சூரன்ஸ் திட்டத்துக்கும் மத்திய அரசு நிதி உதவி அளிக்க வேண்டும் என்று இந்தநேரத்தில் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

# புதிய ரக புடவைகள்

முன்னதாக தொழில் துறை ஆணையர் வி. செல்வராஜ் வரவேற்றார் கோ-ஆப் டெக்ஸ் ஆலோசனைக் குழு தலைவர் அனகாபுத்தூர் ராமலிங்கம் பேசினார். கேரள மாநில தொழில் துறை அமைச்சர் ஈ அகமதுவிழாவில் கலந்து கொண்டு புதிய ரக பாலியஸ்டர் சிபான் ரக புடவைகளை அறிமுகப்படுத்தினார்.

கைத்தறித் துறை கூடுதல் வளர்ச்சி ஆணையர் பி.கே. நந்தா நன்றி கூறினார்.




PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D. M. K. PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD, MADRAS—600 029.
Editor: E. PARASURAMAN

திருவள்ளுவர் பெயரில் மாவட்டம்:

## முதல்வருக்கு முஸ்லிம்லீக் பொதுச் செயலாளர் பாராட்டு

திருச்சி, பிப். 27— திருவள்ளுவர் பெயரில் புதிய மாவட்டம் உருவாக்கப்படும் என்று அறிவித்த முதல்வர் புரட்சித் தலைவருக்கு நன்றியும் பாராட்டும் தெரிவித்துக் கொள்கிறோம் என்று திருச்சி மாவட்ட முஸ்லிம் லீக் பொதுச் செயலாளர் ஏ. காஜா முகைதீன் தெரிவித்துள்ளார்.

## பஞ்சாப் கலவரம்: 44 பேர் சுட்டுக் கொலை

சண்டிகார், பிப். 27 பஞ்சாபில் நடைபெற்ற வன்முறை சம்பவங்களில் இரு பெண்கள் ஒரு குழந்தை உட்பட 4 பேர் சுட்டுக் கொல்லப்பட்டனர். வெடிகுண்டு சம்பவம் ஒன்றில் 3 குழந்தைகள் காயமடைந்தன.

பியோவால் என்னும் கிராமத்தில்ஆயுதம் தாங்கிய 8 சீக்கியர் இளைஞர்கள் ஒரு வீட்டுக்குள் நுழைந்தனர். அந்த வீட்டிலிருந்த இரு பெண்களையும் இரண்டுவயதுகுழந்தையையும் சுட்டுக் கொன்றனர்.

காஞ்சா என்னும்இடத்தில் ஒரு பள்ளி ஆசிரியர் சுட்டுக்கொல்லப்பட்டார்.

ஜலந்தரில் ஒரு வீட்டில் நாட்டு வெடிகுண்டு வெடித்ததில் 3 குழந்தைகள் காயமடைந்தன. வீட்டின் கூரையும் சுவரும் சேதமடைந்தன.

சீக்கியர்களுக்கும் போலீசுக்கும் இடையே நடந்த மோதலில் நிஹாங் சீக்கியர் ஒருவர் சுட்டுக் கொல்லப்பட்டார். கடந்த 6 நாட்களில் இதுவரை 44 பேர் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

பஞ்சாபில் அமிர்தசரஸ் லூதியானா, ஜலந்தர், கன்னா, பெரோஸ்பூர், பாட்டியாலா ஆகியநகரங்களில் ஊரடங்கு உத்தரவு நீடிக்கப் பட்டுள்ளது.

## திண்டுக்கல் ராமச்சந்திரன் மறைவு: சர்வகட்சியினர் இரங்கல்

திண்டுக்கல், பிப். 27 திண்டுக்கல் கழக பிரமுகர் ராமச்சந்திரன் கடந்த 22ந்தேதி யன்று விபத்தில் காலமானார். அவருக்கு வயது 35. திருமணம் ஆகாதவர்.

மறைந்த ராமச்சந்திரன் சைக்கிளில்சென்றுகொண்டிருந்தபோது பின்னால் வந்த பஸ் மோதியதால் மரணமடைந்தார்.

மறைந்த ராமச்சந்திரன் மதுரைமாவட்ட அண்ணா விவசாய சங்கத்தின் துணைச்செயலாளராகவும் திண்டுக்கல் ஆஞ்சநேய பெருமாள் கோவில் அறங்காவலராகவும், திண்டுக்கல் நகர கழக பிரமுகர்களில் ஒருவராகவும் திகழ்ந்தவர்.

ராமச்சந்திரனின் இறுதி சடங்கைத் தொடர்ந்து இரங்கல் கூட்டம் நடைபெற்றது நகர செயலாளர் திண்டுக்கல் சீனிவாசன் தலைமையில் ஜனதா கட்சி சின்னாளப்பட்டி செல்வராஜ், சமதர்மம், காளியப்பன், சேக்தாவூத். வில்லியம்ஸ், ஆர்டியார், மருதைராஜ். முத்துகோபால், வழக்கறிஞர் பிரேம்குமார், அப்துல் பாரி, ஏ. பி. பார்வதி மற்றும் சர்வகட்சி பிரமுகர்கள் இரங்கல் உரையாற்றினார்கள்.

சேலம் ஆத்தூர் நகர சிவாஜி ரசிகர் மன்றத்தினர் மற்றும் தி. மு. க வினர் அக்கட்சிகளிலிருந்து விலகி செல்வி ஜெயலலிதா முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

வெள்ளம் பாதிக்கப்பட்ட பகுதிகளில்

# விவசாயிகளிடம்இருந்து கூட்டுறவு கடனை வசூல் செய்யாதீர்

## அதிகாரிகளுக்கு அமைச்சர் திருநாவுக்கரசு உத்தரவு

திருச்சி, பிப் 27- வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மாவட்டங்களில் உள்ள விவசாயிகளிடம் இருந்து கூட்டுறவு கடனை வசூலிக்காதீர் என்று அமைச்சர் திருநாவுக்கரசு அதிகாரிகளிடம் தெரிவித்துள்ளார்.

திருச்சி வந்த அமைச்சர் திருநாவுக்கரசு நிருபர்களிடம் கூறியதாவது:-

அண்மையில் ஏற்பட்ட பெரு வெள்ளத்தால் திருச்சி, தஞ்சை, புதுக்கோட்டை, தென்ஆற்காடு, ராமநாதபுரம், மாவட்டங்கள் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளன.

இந்த மாவட்டங்களில் ஏற்பட்ட வெள்ளத்தால் பயிர் நிலங்களில் விளைச்சல் பாதிக்கப்பட்டு விட்டதால்விவசாயிகள் பாதிக்கப்பட்டுள்ளனர்

ஆகவே வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட இந்த மாவட்டங்களில் விவசாயிகளிடம் இருந்து கூட்டுறவு கடன், மற்றும் பழைய பாக்கியைவசூலிக்காமல் இருக்குமாறும் கூட்டுறவு கடன் நிறுத்தி வைக்கப்பட்டு இருப்பதாகவும் அமைச்சர் தெரிவித்தார்.

மற்ற மாவட்டங்களில் கூட்டுறவு கடன் பாக்கிக்காக எந்த இடத்திலும் விவசாயிகளிடம் கெடுபிடி போன்றநடவடிக்கைகளில ஈடுபட வேண்டாம் என்றும் அதிகாரிகளிடம் சொல்லப்பட்டு இருக்கிறது.

விவசாயிகளிடமிருந்து கூட்டுறவுக் கடன் ரூ.200 கோடிவரவேண்டியுள்ளது

இந்த ஆண்டு கூட்டுறவு கடன் வழங்கும் சங்கங்கள் மூலம் குறுகிய கால பயிர்க்கடனாக ரூ. 112 கோடி வழங்கப்பட்டுள்ளது.

கூட்டுறவு சங்கங்களுக்கான தேர்தல் 6 மாதத்திற்குள் நடைபெறும் என்று கூறினார்.

வறட்சி நிலை இருந்ததால் கடந்த ஆண்டு மாவட்டங்களில்கைத்தறி கண்காட்சியை நடத்த இயலவில்லை

இப்போது ரூ. 60 கோடி மதிப்புக்கு மேல் உள்ள தைத்தறித் துணிகள் தேங்கி உள்ளன.

இந்த ஆண்டு ஏப்ரல் மாதத்தில் மாவட்டங்களில கைத்தறி கண்காட்சி நடைபெறும்.

அப்போது 20 சதவிகித தள்ளுபடி தரப்படும் என்றும் அமைச்சர் கூறினார்.

திருச்சியில் சிந்தாமணி சூபர் மார்க்கெட்டுக்கு அமைச்சர் திருநாவுக்கரசு சென்று திடீர் சோதனை நடத்தினார்.

இந்தியத் தூதர்

## மாத்ரேயை கடத்தியவன் பாகிஸ்தான் ஆதரவாளன்

லண்டன், பிப். 27. பர்மிங்காமில் இந்திய துணைத் தூதர் ஆர்.எச். மாத்ரே கடத்திச் செல்லப்பட்டு சுட்டுக் கொல்லப்பட்டார் அல்லவா?

அவரை கடத்திச்சென்றவன் தீவிர பாகிஸ்தான் ஆதரவாளன் என்று பர்மிங்காம் போலீசார் கண்டுபிடித்துள்ளனர்.

அவன் பெயர் அப்துல் கையும் ராஸா (வயது 27) இவன் பர்மிங்காமில் கைது செய்யப்பட்டான். பர்மிங்காமில் உள்ள கோர்ட்டில அவன் ஆஜர்படுத்தப்பட்டான்.

பாகிஸ்தான் பாஸ்போர்ட் வைத்திருக்கும் அப்துல் கையும் பாரிஸில் உள்ள ஒரு இடத்தை தன்னுடைய நிரந்தர விலாசம் என்று கொடுத்திருக்கிறான்.

இவனுடன் சேர்ந்த மற்ற 3 பேர்களையும் போலீசார் வலைவீசித் தேடி வருகிறார்கள்.

காஷ்மீர் விடுதலை முன்னணி என்று தங்களை சொல்லிகொள்ளும்பாகிஸ்தான் ஆதரவாளர்கள் இயக்கத்தைச் சேர்ந்தவன் இந்த அப்துல்கையும்.

மாத்ரேகொல்லப்பட்டதற்கும் அந்தச் சதித்திட்டத்திற்கும் காரணமானவர்கள் யார் என்பதைக் கண்டுபிடிப்பதில் போலீசார் தீவிரமாக இருந்து வருகிறார்கள்.

## இலங்கையில் நெருக்கடி நிலை நீடிப்பு

கொழும்பு, பிப். 27 - இலங்கை முழுவதும் மார்ச் 17-ந்தேதி வரை நெருக்கடிநிலை நீடிக்க, இலங்கை பாராளுமன்றம் ஒப்புதல் அளித்துள்ளது.

இதற்கு ஆதரவாக 729 ஓட்டுக்களும் எதிராக 8 ஓட்டுக்களும் கிடைத்தன.

இலங்கையில் தமிழர்கள் தனிநாடு கேட்டுப் போராட்டம் நடத்திய போது ஏற்பட்ட கலவரத்தை தொடர்ந்து கடந்த மே மாதம் நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யப்பட்டது.

"இலங்கையில் வடக்கு கிழக்கு பகுதிகளில் கலவரம் தொடர்ந்து நீடிப்பதால் நெருக்கடி நிலை நீடிக்கப்படுகிறது" என்றுபாராளுமன்றத்தில் பிரதமர் பிரேமதாசா தெரிவித்தார்.

ஜிம்கானா கிளப்

## தொழிலாளர் பிரச்னை: அமைச்சர் ராகவானந்தம் முயற்சி வெற்றி

சென்னை. பிப். 27— மதராஸ் ஜிம்கானா கிளப் தொழிலாளர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்ட 19 தொழிலாளர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக் கொள்வது உள்ளிட்ட பல்வேறு கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் செய்து வந்தனர்.

அமைச்சர் ராகவானந்தம் உத்தரவுப்படி துணை லேபர் கமிஷனர் ஆர். செல்லத்துரை சமரச பேச்சு நடத்தி சுமுக தீர்வுக்கு வழி வகுத்தார். இதன் காரணமாக வேலை நிறுத்தம் 25ந்தேதியுடன் வாபஸ் பெறப்பட்டு தொழிலாளர்கள் மீண்டும் வேலைக்குத் திரும்பினர்.

தொழிலாளர் பிரச்சினையை சுமுகமாக முடித்து வைத்தமைக்காக அரசுக்கும், தொழிலாளர் துறை துணை ஆணையருக்கும் ஜிம்கானா கிளப் தொழிலாளர்கள்சங்கத்தலைவர் சீனிவாசன் நன்றி தெரிவித்துள்ளார்.

கோழிவளர்ப்பு நிறுவனத் தலைவர்

## கல்யாணிராமசாமி மராட்டியம்குஜராத்தில் சுற்றுப்பயணம்

### கோழிப் பண்ணைகளைப்பார்வையிட்டார்

சென்னை, பிப் 27. தமிழ்நாடு கோழி வளர்ப்பு நிறுவனத் தலைவர் கல்யாணி ராமசாமி மகாராஷ்டிரம், குஜராத் மாநிலங்களில் சுற்றுப் பயணம் செய்து கூட்டுறவுத் துறையில் கோழிப் பண்ணைகள் செயல்படும் விதங்களை கண்டறிந்தார்.

தமிழகத்தில் கோழி வளர்ப்பு நல்லமுறையில் அபிவிருத்தி அடைந்து வருகிறது. சீர்மிகுதிட்டங்களை தமிழக அரசு ஏற்படுத்தி கிராமங்கள் தோறும் கோழி வளர்ப்பு பெருக்கம் அடைந்த ஏழை எளிய மக்களும் பயனடைந்து வருகிறார்கள்.

தமிழ் நாடு கோழிப் பண்ணை அபிவிருத்தி கார்ப்பொரேஷன் தலைவர் கல்யாணி ராமசாமி தமிழகத்தில் பல பகுதிகளுக்கும் சென்று கோழிப் பண்ணை அபிவிருத்தியில் கவனம் செலுத்தி வருகிறார்.

அண்மையில் அவர் மகாராஷ்டிரம், குஜராத். ஆகிய மாநிலங்களில் சுற்றுப்பயணம் செய்தார். கூட்டுறவு முறையில் அங்கெல்லாம் கோழிப்பண்ணைகள் செயல்படும் விதத்தை அவர் நேரில் கண்டறிந்தார்.

குஜராத் மாநிலம் சூரத் மாவட்டத்தில் பெடி பேடியா கிராமத்தில் இயங்கி வரும் கூட்டுறவு கோழிப் பண்ணையை அவர் சென்று பார்த்தார். புகாரி கிராமத்துக்கும் அவர் சென்று அங்கே ஆதிவாசிகள் நடத்தும் சுமார் ஒரு லட்சம் கோழிகள் கொண்ட கோழிப் பண்ணையை பார்த்தார்.

மகாராஷ்டிர மாநிலம் பூனாவில் வெங்கடேஸ்வரா குஞ்சு பொரிப்பு நிலையத்தை பார்வையிட்டார். செயற்கை முறையில் கோழிக்குஞ்சுகள் பொரிக்கப்படுவதையும்அவர் கண்டறிந்தார்.

பம்பாயில் சில்லறை விற்பனை நிலையங்களையும் அவர் பார்த்தார். பம்பாய் நகர் தாராவி, கோவண்டி பகுதிகளில் உள்ள கழகத்தினரையும் அவர் சந்தித்துப் பேசினார்.

அமெரிக்காவிடமிருந்து

# இந்தியாவுக்கு எதிராக பாகிஸ்தான் வாங்கும் நவீன ரக ஏவுகணை

புதுடெல்லி. பிப் 27- அமெரிக்காவிடமிருந்து நவீன ரக விமானப் போர் ஏவுகணைகளை பாகிஸ்தான் வாங்குகிறது இதனால் இந்தியாவுக்கு புதிய ஆபத்து உருவாகியுள்ளது.

விண்வெளியில் நடைபெறும் போரில் விமானத்திற்கு விமானம் தாக்குதல் நடத்திக் கொள்ளும். அப்படி தாக்குதல் நடத்துவதற்காக மிக நவீன நடுத்தர ரக ஏவுகணைகளை வாங்குவதற்காக அமெரிக்காவிடம் பாகிஸ்தான் ஒப்பந்தம் போட்டுள்ளது

அமெரிக்காவிடமிருந்து பலலட்சம் டாலர் செலவில் வாங்குவதற்கு ஒப்பந்தத்தில் பாகிஸ்தான் கையெழுத்திட்டுள்ளது

இப்போது அங்கிருந்து வாங்கிக் கொண்டிருக்கும் எப் 16 ரக சண்டை விமானங்களில் இந்த ஏவுகணைகள் பொருத்தப்படும். இன்னும் அத்தகைய 36 விமானங்கள் பாகிஸ்தானுக்கு சப்ளை செய்யப்பட இருக்கிறது.

பாகிஸ்தான் விமானப் படையில் தற்போதுள்ள மிராஜ் 3 மற்றும்மிராஜ் 5 ரக சண்டை விமானங்களிலும் அந்த ஏவுகணைகளை இணைக்க முடியும்.

### ஸ்பாரோ ஏவுகணை

கண் பார்வைக்கு அப்பால் 30 கிலோ மீட்டர் தொலைவில் வரக்கூடிய எதிரி விமானங்களைக் கூட முற்றிலும் குறிபிசகாமல் தாக்கக் கூடிய வலிமை படைத்தது "ஸ்பாரோ" எனப் பெயரிடப் பட்டிருக்கும் அந்த ஏவு கணைகள்.

அவை வந்து சேர்ந்தால் பாகிஸ்தான் விமானப் படையின் ஆதிக்க பலம் நிச்சயமாக மேலோங்கும்.

இப்பிராந்தியத்துக்கு மிகஉயர்தரநவீனராணுவ தொழில் நுட்ப சாதனம் வந்து விட்டது என்பதை அந்த ஏவுகணை சப்ளை குறிக்கும்என்று இங்குள்ள ராணுவநிபுணர்கள் கருதுகிறார்கள்.

பாகிஸ்தானுக்கு "ஸ்பாரோ" ரக ஏவுகணைகளை அமெரிக்கா அனுப்பாது என்று இந்தியாவில் உள்ள நிபுணர்கள் இதுவரை எண்ணிக் கொண்டிருந்தனர்.

### நவீன ராடார்

அந்த இரு நாடுகளிடையே தற்போது ஏற்பட்டுள்ள இந்த ஒப்பந்தம் தங்களுடைய 'பயங்கர அச்சத்தை' உறுதிப்படுத்துவதாக உள்ளது என்றும் அவர்கள் கூறினர்.

அந்த அளவு திருப்பித் தாக்கி சமாளிக்கக்கூடிய மின்னனு ஏவுகணைகள் இந்திய விமானப் படையில் தற்போது கிடையாது.

1982 ஜூன் மாதம் பீக்கா பள்ளத்தாக்கு மீது நடைபெற்ற விமானப் போரில் அந்த 'ஸ்பாரோ' ஏவுகணைகளை உபயோகித்துதான் 86 சிரியா விமானப் படை ஜெட் சண்டை விமானங்களை இஸ்ரேல் சுட்டுக் கீழே தள்ளின.

மேலும் 334 கிலோ மீட்டருக்கு அப்பால் வரக் கூடியஎதிரிவிமானங்களை கூட கண்டுபிடித்து எச்சரிக்கை செய்யும் மிகநவீன விமான கட்டுப்பாடு ராடார் சாதனங்களையும் அமெரிக்காவிடமிருந்து வாங்க பாகிஸ்தான் ஒப்பந்த ஏற்பாடுகளை தற்போது செய்துவருவதாகவும் தகவல்கள் இங்கு கிடைத்துள்ளன

இந்த புதிய ஆபத்தையும் இந்தியவிமான படை உடனடியாக பரிசீலித்து அத்தகைய ராடார் எச்சரிக்கை சாதனங்களையும் வாங்கவேண்டும் என்று பாதுகாப்புத்துறை நிபுணர்கள் தெரிவிக்கிறார்கள்.

## குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் ரகுநாதன் நிகழ்ச்சிகள்

பிப். 29 வாலாஜா ராமபுரம் கிராம கோழிப் பண்ணை மேம்பாட்டுக் கழகத்தின் மூலம் கடன் வழங்கும் விழா.

ராணிப்பேட்டை பொது மக்கள் வரவேற்பு.

மார்ச்4ந்தேதிசோளிங்கர் ஒன்றிய செயலாளர் இல்லத் திருமணம்.

5ந்தேதி வெம்பாக்கம்ஒன்றிய செயலாளர் ஏற்பாடு செய்துள்ள நிகழ்ச்சிகளில் சத்துணவு அமைச்சருடன் கலந்து கொள்ளுதல்.

6, திருவண்ணாமலை தண்டராம்பட்டு ஒன்றிய செயலாளர் நிகழ்ச்சியில் சத்துணவு அமைச்சருடன் பங்கேற்றல்.

7 கீழ்பெண்ணாத்தூர் ஒன்றிய செயலாளர் ஏற்பாடு செய்துள்ள நிகழ்ச்சியில சத்துணவு அமைச்சருடன் கலந்து கொள்ளுதல்.

8.வேலூர் அணைக்கட்டு தொகுதிசட்டமன்றஉறுப்பினர்விஸ்வநாதன்ஏற்பாடு செய்துள்ள நிகழ்ச்சியில் சத்துணவு அமைச்சருடன் கலந்துகொள்ளுதல். மற்றும் குடிநீர் திட்டங்கள் துவக்கி வைத்தல். மாலை வேலூரில் பொது மக்கள் வரவேற்பு.

9. நெமிலி ஒன்றியசெயலாளர் ஏற்பாடு செய்துள்ள நிகழ்ச்சியில் சத்துணவு திட்ட அமைச்சர் ஆதிதிராவிடர் நலத்துறை அமைச்சர் ஆகியோருடன் கலந்துகொள்ளல்.

மாலை, அரக்கோணம் பொதுமக்கள் வரவேற்பு

13- திருச்சியில் சத்துணவு அமைச்சருடன் நிகழ்ச்சிகளில் பங்கேற்றல்

14, திருச்சியில் சத்துணவு அமைச்சருடன் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளுதல்.

29 பேர்களை கொன்று

## 43 பேரை காயப்படுத்திய பயங்கர புலி

ஜெய்ப்பூர், பிப். 27- 29 பேரைக் கொன்று 43 பேரை காயப்படுத்திய பயங்கரப் புலியைக் கொல்பவருக்கு பரிசு வழங்குவதாக ஒரிசா அரசு அறிவித்துள்ளது.

ஒரிசாமாநிலம், கோராபட் மாவட்டத்தின் காட்டுப் பகுதியைச் சேர்ந்தஇந்தபுலி காட்டை ஒட்டியுள்ள கிராமங்களுக்கு வந்து எதிர்ப்படுவோரை அடித்துக் கொன்று காட்டுக்குள் இழுத்துச் சென்று விடுமாம்

நீண்ட நாட்களாகடிமிக்கி கொடுத்துவரும் இந்தப் புலியைக் கொல்பவருக்கு தக்க பரிசுகள் வழங்கப்படும் என தற்போது ஒரிசா அரசு அறிவித்துள்ளது. இந்தப் புலியின் நடமாட்டத்தால் அப்பகுதியில் உள்ளமக்கள் பெரிதும் பீதியடைந்துள்ளனர்.

மாலை 5 மணிக்குமேல் காட்டை ஒட்டியுள்ள கிராமங்களில் மக்கள் வீட்டை விட்டு வெளியே வருவதில்லை.

49-வது வட்டத்தில்

## ஆர். டி. சீத்தாபதி கழகக் கொடி ஏற்றுகிறார்

சென்னை, பிப். 27— சென்னை 49-வதுவட்டம் சாலை விநாயகர் கோவில் தெரு மற்றும் மலையப்பன் தெருவில் இன்று (27-ந்தேதி) மாலை 7 மணிக்கு கழகக் கொடிஏற்று விழாக்கள் நடக்கின்றன

வி. நடராசன் தலைமையிலும், டி. நடராசன் வரவேற்புரையிலும், ச. கோவிந்தசாமி முன்னிலையிலும் நடக்கும் இந்த கொடியேற்று விழாக்களில் ஆர். டி. சீத்தாபதி எம். எல். சி கலந்து கொண்டு கழகக் கொடிகளை ஏற்றி வைக்கிறார்.

ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி எம்.வி. ராமன் எஸ். வி. சங்கர், ஆனந்தன், ஏழுமலை, டி. பாலன், எம். பன்னீர்செல்வம் ஜான் பாஷா, எல்.குமார், எம். யூசுப் மற்றும் பலர் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

போலீஸ் அதிகாரியை கத்தியால் குத்தமுயன்ற

## ஆசாமிக்கு 1 ஆண்டு சிறை

சென்னை, பிப். 27— போலீஸ் அதிகாரியை கத்தியால் குத்த முயன்ற பிக்பாக்கெட் வாலிபர் ஒருவர் தடுப்பு காவல் சட்டத்தின் கீழ் ஒரு வருடம் சிறையில் அடைக்கப்பட்டார். இவர் ஏற்கனவே 10 முறை ஜெயில் தண்டனை அனுபவித்தவர்.

சென்னைமயிலாப்பூரை சேர்ந்தவர் ராஜி என்கிற ராஜேந்திரன் (வயது27) இவர் ஒரு பிரபல பிக்பாக்கெட் ஆசாமி. இவர் அப்பகுதியிலுள்ள பழனி என்பவர் கடையிலிருந்து 17 ரூபாயை திருடிக் கொண்டு ஓடினார். அப்போது அப்பகுதியில் ரோந்து சுற்றிக் கொண்டிருந்த மயிலாப்பூர் குற்றப் பிரிவு சப் இன்ஸ்பெக்டர் மீரான் அவனைப் பிடிக்க துரத்திச் சென்றார். உடனே ராஜு தான் மறைத்து வைத்திருந்த கத்தியை எடுத்து சப்-இன்ஸ்பெக்டரைக் குத்த முயன்றான். ஆனால் சப்-இன்ஸ்பெக்டர் மீரான் அவனை வளைத்துப் பிடித்து கைது செய்தார். விசாரணையில் அவன் ஏற்கனவே 10 முறை சிறை சென்றதாகத் தெரிய வந்தது. இவனை தடுப்புகாவல் சட்டத்தின் கீழ் ஒருவருடம் சிறையில் அடைக்குமாறு போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் உத்தரவிட்டார்.

## சென்னை டாக்டர்களுக்கு தங்கப்பதக்கம்

சென்னை, பிப். 27- சென்னையைச் சேர்ந்த இந்திய மருத்துவத் துறை ஆராய்ச்சி நிபுணர்கள் டாக்டர் என், கௌரி, டாக்டர் எஸ். வெங்கட்டராகவன், ஆகியோருக்கு குஜராத் ஆயுர்வேத பல்கலைக்கழகம் அவர்களின் சேவைகளைப் பாராட்டி தங்கப்பதக்கம் அளித்திருக்கிறது.

இந்த 2 டாக்டர்களும் ஆயுர்வேத ஆராய்ச்சி நிறுவனத்தைச் சேர்ந்த டாக்டர் ஏ.லட்சுமிபதி பிரிவைச் சேர்ந்தவர்கள்.

80-வது வட்டசெயலாளர்

## பாண்டியன் சகோதரி திருமணம்

சென்னை, பிப். 27- சென்னை 80. வது வட்ட கழக செயலாளர் ஆர். பாண்டியனின் சகோதரி ஆர் தமிழரசிக்கும் வி.கே. ராஜாவுக்கும் நேற்று காலை சூளை மேடு கெங்கையம்மன் கோயில் தெருவிலுள்ள சின்ன மணி வள்ளியம்மை திருமண மண்டபத்தில் திருமணம் நடந்தது.

மணவிழாவிற்கு அமைச்சர் அண்டே வந்திருந்து மணமக்களை வாழ்த்தினார்.



★ மாவட்டங்களுக்கு தியாகத் தலைவர்களின் பெயர்களை வைப்பதை கேலிசெய்வதா?

கருணாநிதியின் பேச்சுக்கு

# சுதந்திரப் போராட்ட தியாகிகள் காங்கிரஸ் தலைவர் கண்டனம்

**சென்னை, பிப். 27. மாவட்டங்களுக்கு தேசத்திற்காக தியாகம் செய்த மிக உயர்ந்த தியாகத் தலைவர்களின் பெயர்களை சூட்டுவதை கேலி பேசுவதா என கருணாநிதிக்கு சுதந்திர போராட்ட தியாகிகள் காங்கிரஸ் தலைவர் ஆர். தனுஷ்கோடி ராஜா கண்டனம் தெரிவித்துள்ளார்.**

இது பற்றி ஆர். தனுஷ்கோடி ராஜா விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:-

இந்தியதேச விடுதலைக்காக லட்சோப லட்சம் மக்கள் தியாகம் செய்தார்கள். எந்தப் பலனையும் கருதாது நம்நாடுவிடுதலை பெற வேண்டும் என்ற ஒரே குறிக்கோளில் அவர்கள் தங்கள்வாழ்வை அர்ப்பணித்தனர். குடும்பங்களை இழந்தனர் கருணாநிதி அரசு தியாகிகளை கவுரவிக்கவில்லை.

புரட்சித்தலைவர் அரசு தான் தியாகிகளை கவுரவித்து, தியாகச்செம்மல்களுக்கு அரசு சார்பாக விழாக்களை எடுத்து, மாவட்டங்களை அமைத்து தியாகிகளுக்கு நல்ல பல சலுகைகளை வழங்கிக் கொண்டிருக்கிறது.

## தியாகத்திற்கு பெருமை

ஆளுநர் உரையின்வாயிலாக புரட்சித்தலைவர் அரசு புதிய மாவட்டங்களை அமைத்துள்ளது. புதிதாக அமைக்கப்பட்டுள்ள மாவட்டங்களில் 4 மாவட்டங்கள் தியாகிகளுக்குப் பெருமை சேர்ப்பதாக உள்ளது.

வ. உ. சிதம்பரனார், முத்து ராமலிங்கத்தேவர், தில்லையாடி வள்ளியம்மை, காமராஜர் என்று தேச பக்தச் செம்மல்களின் பெயர்களைச்சூட்டிதேசத்திற்கும், தியாகத்திற்கும் பெருமை சேர்த்துள்ளார் புரட்சித் தலைவர்.

இதிலும் கருணாநிதி தனது குறுகிய புத்தியை வெளிக் காட்டியுள்ளார். தில்லையாடி வள்ளியம்மைக்கு ஒருமாவட்டமா? அவரது பெயரை ஒரு ஊராட்சி ஒன்றியத்திற்கு வைத்தால் போதாதா?'' என்று கேட்டுத் தனது தரத்தை நிலைநாட்டிக் கொண்டிருக்கிறார்.

தில்லையாடி வள்ளியம்மை - தமிழச்சி, அரிசனப் பெண்மணி. தஞ்சையிலே தோன்றிய அந்த வீராங்கனை, அரை நூற்றாண்டுக்கு முன் தென்னாப்பிரிக்கா போய், அங்கே காந்தியடிகளோடு பல போராட்டங்களிலே பங்குகொண்டு, அருந்தியாகங்களை ஏற்றவர்.

அவரது தியாகம்கடலினும் பெரிது. அதனை ஒருமாவட்டத்திற்குக்கூட அல்ல; ஊராட்சி ஒன்றியத்திற்கு வைத்தால் போதும் என்று புகலுவது போக்கிரித்தனமாகும்.

இதே கருணாநிதி தாம் முதலமைச்சராக இருந்த போது பாசிப் பயறுக்கும் நெல்லுக்கும், புல்லுக்கும் கூடத் தமது குடும்பத்துப் பெயர்களை வைத்துக் கொண்டார்.

இப்போது புரட்சித் தலைவர் தேசத்திற்காக தியாகம் செய்த மிக உயர்ந்த தியாக தலைவர்களின் பெயர்களைச்சூட்டுவதை கேலி புரிகிறார். புரட்சித்தலைவர்உயர்ந்த உள்ளம் படைத்தவர். காந்தியடிகளுக்குப் பிறகு அப்படியொரு உத்தமத் தலைவராக புரட்சித் தலைவரையே காண்கிறோம்.

தனக்காக ஒரு துரும்பைக் கூட சொத்து என்று வைத்துக் கொள்ளாமல், "எனது சொத்துக்கள் அனைத்தும் தமிழ் நாட்டு மக்களுக்கே'' என்று கூறியவர் புரட்சித்தலைவர். கோடி கோடி சொத்துக் குவித்தும், திருப்தியுறாது மேலும் சேர்க்க எண்ணும் கருணாநிதி சுயநலத் தலைவரே ஆவார்.

அதனால் தான் அவருக்குத் தியாகத்தை மதிக்கத் தெரியவில்லை; குறை கற்பிக்கிறார்.

தியாகச் செம்மல்களின் பெயராலேமாவட்டங்கள் கண்டுள்ள தமிழகமுதல்வர் புரட்சித்தலைவர் அவர்களை மனதாரப்பாராட்டுகிறோம்.

இவ்வாறு தியாகிகள் காங்கிரஸ் தலைவர் ஆர். தனுஷ்கோடிராஜா தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

## கவாஸ்கருக்கு வெள்ளி கிரிக்கெட்பாட் பரிசு

கோலாப்பூர், பிப்.27- பிரபல கிரிக்கெட்ஆட்டக்காரர் கவாஸ்கருக்கு கர்நாடக மாநிலம் கோலாப்பூரில்பிரமாண்டமான வரவேற்பு அளிக்கப்பட்டது.

கடந்த 30 டெஸ்ட்கிரிக்கெட் ஆட்டங்களில் அவர் 30 சதம் ரன்களை எடுத்து உலகத்திலேயே ஒரு சாதனை புரிந்ததை பாராட்டி கோலாப்பூர்நகர மேயர் கவாஸ்கருக்கு வெள்ளியால் ஆன கிரிக்கட் மட்டை (பாட்) ஒன்றை பரிசாக அளித்தார். பாராட்டு இதழ்களும் வாசித்தளிக்கப்பட்டன.

ஆதம்பாக்கத்தில் வெள்ளத் தண்ணீர்

## அரசு நடவடிக்கைக்கு மகளிர் சங்கம் நன்றி

சென்னை, பிப். 27- பெருமழையின் காரணமாக ஆதம்பாக்கம் ஏரி நிரம்பியதை அடுத்து அப்பகுதியில் உள்ள வீடுகளையும், சாலைகளையும் தண்ணீர் சூழ்ந்ததை அடுத்து மக்கள் அமைச்சர் எஸ். டி. எஸ்.சிடம் தக்க நடவடிக்கை எடுக்குமாறுகூறினர்.

இதையடுத்து சைதாப்பேட்டை ஆர். டி. ஓ. ஜலால் வெள்ளத் தண்ணீரை அகற்ற நடவடிக்கை எடுத்துள்ளதற்கும், நிரந்தர தீர்வுக்கு வழிசெய்ய ஆலோசிக்க உறுதி தெரிவித்துள்ளதற்கும் தில்லை கங்கா நகர் மகளிர் சங்க சார்பில் திருமதி மீனாட்சி நன்றி தெரிவித்துக் கொண்டுள்ளார்.

அரசு ஊழியருக்கு ரூ. 10 ஆயிரம்

## முதல்வருக்கு அரசு ஊழியர் சங்கங்கள் பாராட்டு

சென்னை, பிப். 27. அரசு ஊழியர்கள் ஓய்வு பெறும்போது 10 ஆயிரம் ரூபாய் வழங்க உத்தரவிட்ட முதல்வர் புரட்சித்தலைவருக்கு தமிழ்நாடு நுகர் பொருள் வாணிபக் கழக அண்ணா தொழிலாளர் சங்க பொதுச் செயலாளர் அ. கு. ஏழுமலையும் தமிழ்நாடு அரசு அலுவலர் ஒன்றிய முன்னாள் பொதுச் செயலாளர் என். சுப்பிரமணியமும், தமிழ்நாடு வீட்டுவசதி வாரிய அண்ணா தொழிலாளர்கள் ஊழியர்கள்சங்க மாநிலப் பொதுச செயலாளர் எம். மோகனும் நன்றியும், பாராட்டும் தெரிவித்துள்ளனர்.